உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
ஆரூர் அமர்ந்த அரசே போற்றி.

1/2

# திருவாரூர்த் தலத்
# தேவாரத் திருமுறைகள்.



இது
வடபாதிமங்கலம் S. ஜானகி அண்ணி அவர்கள்
தேவார பாடசாலை ஆசிரியர்,
தி. சாமிஐயா தேசிகரால் தொகுக்கப்பெற்று
ஸ்ரீ தியாகேசப்பெருமான் கும்பாபிடேக நன்னளாகிய
தாரண ஆண்டு மகரமதி 22-ம் நாள் (4—2—45)
பானுவாரத்தன்று வெளியிடப்பெற்றது.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்

சைவ சமயாசாரிய சுவாமிகள் துணை.


சம்பந்தர்.


அப்பர்.


சுந்தரர்.


மணிவாசகர்.

## சமயகுரவர் வணக்கம்.

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கல்மிதப்பி லணைந்தபிரா னடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி.

சைவத்தின் மேற்சம யம்வே றிலையதிற் சார்சிவமாந்
தெய்வத்தின் மேற்றெய்வ மில்லெனும் நான்மறைச் செம்பொருள்வாய்
மைவைத்த சீர்திருத் தேவார முந்திரு வாசகமும்
உய்வைத் தரச்செய்த நால்வர்பொற் றாளெம் முயிர்த் துணையே.

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## மதிப்புரை.

இந்நில உலகிலே சிறப்புற்று விளங்குவது மாதவஞ் செய்த தென்றிசையே—தமிழகமே. அதினும் பிறக்க முத்திதரும் திருவாரூர் ஒப்புயர்வு செப்பரிய தெய்வத் திருத் தலமாகும். இத் தலத்திலெழுந் தருளியுள்ள ஸ்ரீ தியாகேசப் பெருமானது திருவடிக் கமலங்களைத் துதிக்கவெழுந்த திருமுறைத் திருப்பாசுரங்கள் மிகப்பல. அவைகளை அன்புடன் நியமமாக ஓதுபவர்கள், அப்பெருமானது திருவடிக்கண் நிலைத்த அன்புடையராய் இஷ்டசித்திகளைப் பெறுவர்.

மிகப்பலவாகிய அத்திருமுறைகள் எல்லாவற்றையும் ஓதுவது பலருக்கு இயலாத தொன்றாகும், ஆதலின், அவற்றுள் சிலவற்றைத் தொகுத்து வெளியிட்டால் இலகுவாகப் பாராயணஞ் செய்யக்கூடு மென்று கருதி, இத் திரட்டை அப்பெருமானது கும்பாபிடேக நன் னாளில் அச்சிட்டு வழங்குவதற்குப் பொருளுதவி புரிந்த வடபாதி மங்கலம் மாது **ஸ்ரீ S. ஜானகி அண்ணி** அவர்களுக்கு ஸ்ரீ தியா கேசப் பெருமான் திருவருள் புரிவாராக.

சைவ சித்தாந்த சரபம், **ஸ்ரீ காசிவாசி ஈசான சிவாசாரியர்,**
பழனி. வேத சிவாகம பாடசாலைப் போசிரியர்

## பதிப்புரை.

தெய்வத்திருமுறைகள் பனிரண்டனுள் மூவர்களது தேவாரத் திருமுறைகள் ஏழும் அமையப்பெற்ற தலங்கள் முறையே திருவாரூர், காஞ்சீபுரம், வேதாரணியம் ஆகிய மூன்றுமேயாம் அவற்றுள் அதிக மான பதிகங்கள் பெற்றுள்ளது திருவாரூரே. ஏனைய திருமுறைகளி லும் இத்தலத்திற்குப் பாடல்கள் அமைந்திருப்பது பெருஞ் சிறப்பைத் தருவ தொன்றாகும். இத்துணைச் சிறப்புக்களமைந்த இத்தலப்பாக்கள் பலவற்றோடு இவ்வூரின்கண் அமைந்துள்ள அரநெறி, பரவையுண்மண் டளி என்ற இரு தலங்களின் பாக்கள் சிலவும், அவ்வத் திருமுறை களோடு இவ் வெளியீட்டில் சேர்க்கப் பட்டிருக்கின்றன.

இவ்வரிய வெளியீட்டைக் கண்ணுறும் சிவநேயச் செல்வர்களனை வரும் இதனை அன்புடன் ஓதிப்பயன் பெறுமாறு வேண்டுகின்றேன்.

திருவாரூர்,
1-2-45.

**தி. சாமிஐயா தேசிகர்,**
தேவார பாடசாலை ஆசிரியர்.

உ

சிவமயம்.



# திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்.

## 1-வது திருமுறை.

திருவிருக்குக்குறள்—பண்-குறிஞ்சி-

திருச்சிற்றம்பலம்.

சித்தந் தெளிவீர்காள்
அத்தன் ஆரூரைப்
பத்தி மலர்தூவ
முத்தி யாகுமே. (1)

பிறவி யறுப்பீர்காள்
அறவன் ஆரூரை
மறவா தேத்துமின்
துறவி யாகுமே. (2)

துன்பந் துடைப்பீர்காள்
அன்பன் அணியாரூர்
நன்பொன் மலர்தூவ
இன்ப மாகுமே. (3)

உய்ய லுறுவீர்காள்
ஐயன் ஆரூரைக்
கையி னற்றொழ
நையும் வினைதானே. (4)

பிண்டம் அறுப்பீர்காள்
அண்டன் ஆரூரைக்
கண்டு மலர்தூவ
விண்டு வினைபோமே. (5)

பாசம் அறுப்பீர்காள்
ஈசன் அணியாரூர்
வாச மலர்தூவ
நேச மாகுமே. (6)

வெய்ய வினைதீர
ஐயன் அணியாரூர்
செய்ய மலர்தூவ
வையம் உமதாமே. (7)

அரக்கன் ஆண்மையை
நெருக்கினன் ஆரூர்
கரத்தினுற் றொழத்
திருத்த மாகுமே. (8)

துள்ளும் இருவர்க்கும்
வள்ளல் ஆரூரை
உள்ளு மவர்தம்மேல்
விள்ளும் வினைதானே. (9)

கடுக்கொள் சீவரை
அடக்கினன் ஆரூர்
எடுத்து வாழ்த்துவார்
விடுப்பர் வேட்கையே (10)

சீரூர் சம்பந்தன்
ஆரூரைச் சொன்ன
பாரூர் பாடலார்
பேரா ரின்பமே. (11)

திருச்சிற்றம்பலம்.

பண்-வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

வீடு பிறப்பெளிதாம் அதனை வினவுதிரேல் வெய்ய
காடிட மாகநின்று கனலேந்திக் கைவீசி
ஆடும் அவிர்சடையான் அவன்மேய ஆரூரைச் சென்று
பாடுதல் கைதொழுதல் பணிதல் கருமமே.

வல்லியந் தோலுடையான் வளர்திங்கட் கண்ணியினன் வாய்த்த
நல்லியல் நான்முகத்தோன் தலையின் அறவேற்றான்
அல்லியங் கோதைதன்னை ஆகத் தமர்ந்தருளி ஆரூர்ப்
புல்லிய புண்ணியனைத் தொழுவாரும் புண்ணியரே.

திருச்சிற்றம்பலம்.

---

## 2 வது திருமுறை.

பண்-காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பவனமாய்ச் சோடையாய் நாவெழாப் பஞ்சுதோய்ச் சட்டவுண்டு
சிவனதாள் சிந்தியாப் பேதைமார் போலநீவெள்கினையே
கவனமாய்ப் பாய்வதோர் ஏறுகந் தேறிய காளகண்டன்
அவனதா ரூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்சல்நெஞ்சே.

பல்லிதழ் மாதவி அல்லிவண் டியாழ்செயுங் காழியூரன்
நல்லவே நல்லவே சொல்லிய ஞானசம்பந்தன் ஆரூர்
எல்லியம் போதெரி யாடும்எம் ஈசனை யேத்துபாடல்
சொல்லவே வல்லவர் தீதிலர் ஓதநீர் வையகத்தே.

---

தீநவிராகம்—பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

பருக்கையானை மத்தகத் தரிக்குலத் துகிர்ப்புக
நெருக்கிவாய நித்திலந் நிரக்குநீள் பொருப்பனூர்
கருக்கொள்சோலை சூழநீடு மாட மாளி கைக்கொடி
அருக்கன்மண்ட லத்தணவும் அந்தணாரு ரென்பதே.

வல்லிசோலை சூதநீடு மன்னுவீதி பொன்னுலா
அல்லிமா தமர்ந்திருந்த அந்தணாரூ ராதியை
நல்லசொல்லு ஞானசம் பந்தனுவின் இன்னுரை
வல்லதொண்டர் வானமாள வல்லர்வாய்மை யாகவே.

திருச்சிற்றம்பலம்.

---

### 3-வது திருமுறை.

பண்-கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்.

அந்தமா யுலகாதி யுமாயினன்
வெந்த வெண்பொடிப் பூசிய வேதியன்
சிந்தையே புகுந்தான் திருவாரூ ரெம்
எந்தை தானெனை யேன்றுகொளுங் கொலோ

வன்னி கொன்றை மதியொடு கூவிளம்
சென்னி வைத்த பிரான் திருவாரூரை
மன்னு காழியுள் ஞானசம் பந்தன்வாய்ப்
பன்னு பாடல்வல் லார்க்கில்லை பாவமே.

திருச்சிற்றம்பலம்.

---



## திருநாவுக்கரசு சுவாமிகள்

### 4-வது திருமுறை.

பண்-காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பாடிளம் பூதத்தினானும் பவளச்செவ் வாய்வண்ணத் தானும்
கூடிள மென்முலை யாளைக்கூடிய கோலத்தி னானும்
ஓடிள வெண்பிறை யானு மொளிதிகழ் சூலத்தி னானும்
ஆடிளம் பாம்பசைத் தானு மாரூ ரமர்ந்தவம் மானே.

பையஞ் சுடர்விடு நாகப் பள்ளிகொள் வானுள்ளத் தானும்
கையஞ்சு நான்குடை யானைக் கால்விர லாலடர்த் தானும்
பொய்யஞ்சி வாய்மைகள் பேசிப்புகழ் புரிந் தார்க்கருள் செய்யும்
ஐயஞ்சி னப்புறத் தானு மாரூ ரமர்ந்தவம் மானே.

பழமொழி-பண்-காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த மேனியான் தாள்தொ ழாதே
உய்யலா மென்றெண்ணி யுறிதூக்கி யுழிதந்தெ னுள்ளம் விட்டுக்
கொய்யுலா மலர்ச்சோலைக் குயில்கூவ மயிலாலு மாரூரரைக்
கையினாற் றொழாதொழிந்து கனியிருக்கக் காய்கவர்ந்த கள்வ னேனே.

மறுத்தானோர் வல்லரக்க னீரைந்து முடியினொடு தோளுந் தாளும்
இறுத்தானை யெழின்முளரித் தவிசின்மிசை யிருந்தான்றன் தலையி
அறுத்தானை யாரூரிலம்மானை யாலால முண்டு கண்டம் [லொன்றை
கறுத்தானைக் கருதாதே கரும்பிருக்கவிரும் புகடித் தெய்த்த வாறே.

திருச்சிற்றம்பலம்,

---

பண்-சீகாமரம்.

அருமணித்தடம் பூண்முலை யரம்பையரொ டருளிப் பாடியர்
உரிமையிற் றொழுவா ருருத்திர பல்கணத்தார்
விரிசடைவிரதிக ளந்தணர் சைவர்பாசுப தர்க பாலிகள்
தெருவினிற் பொலியுந் திருவாரு ரம்மானே.

அளித்துவந்தடி கைதொழுமவர் மேல்வினைகெடு மென்றி வையகம்
களித்துவந் துடனே கலந்தாடக் காதலராய்க்
குளித்துமூழ்கியுந் தூவியுந் துடைந்தாடுகோதையர் குஞ்சி யுள்புகத்
தெளிக்குந் தீர்த்தமரூத் திருவாரு ரம்மானே.

திருச்சிற்றம்பலம்.

ஆரூர் அரநெறி.

பண்-இந்தளம்.

எத்திசை புகினு மெமக்கொரு தீதிலை
தெத்தே யெனமுரன் றெம்முளுழிதர்வர்
முத்தீ யனையதொர் மூவிலை வேல்பிடித்
தத்தி நிறத்தா ரரநெறி யாரே.

வீரமும் பூண்பர் விசயனொ டாயதொர்
தாரமும் பூண்பர் தமக்கன்பு பட்டவர்
பாரமும் பூண்பர்நற் பைங்கண் மிளிரர
வாரமும் பூண்ப ரரநெறி யாரே.

திருச்சிற்றம்பலம்.

# " பூங்கோயில் "



பண் சீகாமரம்.

தாங்கோல வெள்ளெலும்பு பூண்டுதம் ஏறேறிப்
பாங்கான வூர்க்கெல்லாஞ் செல்லும் பரமனார்
தேங்காவி நாறுந் திருவாரூர்த் தொன்னகரில்
பூங்கோயில் உண்மகிழ்ந்து போகா திருந்தாரே.

# " ஆழித் தேர் "



போழொத்த வெண்மதியஞ் சூடிப் பொலிந்திலங்கு
வேழத் துரிபோர்த்தான் வெள்வளையாள் தான்வெருவ
ஊழித்தீ யன்னானை யோங்கொலிமாப் பூண்டதோர்
ஆழித்தேர் வித்தகனை நான்கண்ட தாரூரே.

## திருவாதிரைத் திருப்பதிகம்.

---

பண்-குறிஞ்சி.

முத்து விதான மணிப் பொற்கவரி முறையாலே
பத்தர்க ளோடு பாவையர் சூழப் பலிப்பின்னே
வித்தகக் கோல வெண்டலை மாலை விரதிகள்
அத்த னாரு ராதிரை நாளா லதுவண்ணம்.

பாரூர் பௌவத் தானைப் பத்தர் பணிந்தேத்தச்
சீரூர் பாட லாட லறாத செம்மாப்பார்ந்
தோரூ ரொழியா துலக மெங்கும் பணிந்தேத்தும்
ஆரூ ரன்ற னாதிரை நாளா லதுவண்ணம்

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிருத்தம்.

குலம்பலம் பாவரு குண்டர்முன் னேநமக் குண்டுகொலோ
அலம்பலம் பாவரு தண்புன லாரூ ரவிர்சடையான்
சிலம்பலம் பாவரு சேவடி யான்றிரு மூலட்டானம்
புலம்பலம் பாவரு தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே.

ஆராய்ந் தடித்தொண்ட ராணிப்பொ னாரூ ரகத்தடக்கிப்
பாரூர் பரிப்பத்தம் பங்குனி யுத்திரம் பாற்படுத்தான்
ஆரூர் நறுமலர் நாத னடித்தொண்டன் நம்பிநந்தி
நீராற் றிருவிளக் கிட்டமை நீணா டறியுமன்றே.

பூம்படி மக்கலம் பொற்படி மக்கல மென்றிவற்றால்
ஆம்படி மக்கல மாகிலு மாரூ ரினி தமர்ந்தார்
தாம்படி மக்கலம் வேண்டுவ ரேற்றமிழ் மாலைகளால்
நாம்படி மக்கலஞ் செய்து தொழுதுய் மடநெஞ்சமே.

திருச்சிற்றம்பலம்.

---

## திருநேரிசை,

பஞ்சின்மெல் லடியி னார்கள் பாங்கரா யவர்க ணின்று
நெஞ்சினேய் பலவுஞ் செய்து நினையினு நினைய வொட்டார்
நஞ்சணி மிடற்றி னானே நாதனே நம்ப னேநான்
அஞ்சினேற் கஞ்ச லென்னீ ராரூர்மூ லட்ட னீரே



கோயில், திருக்குளம், செங்கழுநீரோடை இம் மூன்றும் தனித்தனி ஐந்துவேலி பரப்பினதாகும்.

அஞ்சணை கணையி னானை யழலுற வன்று நோக்கி
அஞ்சணை குழலி னாளை யமுதமா வணைந்து நக்கு
அஞ்சணை யஞ்சு மாடி யாடர வாட்டு வார்தாம்
அஞ்சணை வேலி யாரூ ராதரித் திடங்கொண் டாரே.

## 5-வது திருமுறை.

### திருக்குறுந்தொகை.

மட்டு வார்குழ லாளொடு மால்விடை
இட்ட மாவுகந் தேறு மிறைவனார்
கட்டு வாங்கங் கனன்மழு மான்றனோ
டட்ட மாம்புய மாகுமா ரூரரே.

வண்டு லாமலர் கொண்டு வளர்சடைக்
கிண்டை மாலை புனைந்து மிராப்பகல்
தொண்ட ராகித் தொடர்ந்து விடாதவர்க்
கண்ட மாளவும் வைப்பரா ரூரரே.

இவள்ந மைப்பல பேசத் தொடங்கினாள்
அவனை மன்றெனி லாரூ ரனெனும்
பவனி வீதி விடங்கனைக் கண்டிவள்
தவனி யாயின வாறென்றன் றையலே.

திருச்சிற்றம்பலம்.

## 6-வது திருமுறை.

### திருத்தாண்டகம்.

கைம்மான் மதகளிற்றி னுரிவை யான்காண்
கறைக்கண்டன் காண்கண்ணார் நெற்றி யான்காண்
அம்மான்காண் ஆடரவொன் றாட்டி னான் காண்
அனலாடி காண் அயில்வாய்ச் சூலத் தான்காண்
எம்மான்காண் ஏழுலகு மாயி னான்காண்
எரிசுடரோன் காண் இலங்கு மழுவா ளன்காண்
செம்மானத் தொளியன்ன மேனி யான்காண்
திருவாரூ ரான்காண்என் சிந்தை யானே.

உயிரா வணமிருந் துற்று நோக்கி
யுள்ளக் கிழியி னுரு வெழுதி
உயிரா வணஞ்செய்திட் டுன்கைத் தந்தால்
உணரப் படுவாரோ டொட்டி வாழ்தி
அயிரா வணமேறு தானே றேறி
யமரர்நா டாளாதே யாரூ ராண்ட
அயிரா வணமேயென் னம்மா னேநின்
அருட்கண்ணால் நோக்காதார் அல்லா தாரே.

முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள்
 மூர்த்தி யவனிருக்கும் வண்ணங் கேட்டாள்
பின்னை யவனுடைய ஆரூர் கேட்டாள்
 பெயர்த்து மவனுக்கே பிச்சி யானாள்
அன்னையையு மத்தனையு மன்றே நீத்தாள்
 அகன்றாள் அகலிடத்தா ராசா ரத்தைத்
தன்னை மறந்தாள் தன்னாமங் கெட்டாள்
 தலைப்பட்டாள் நங்கை தலைவன் றாளே.

மெய்ப்பால்வெண் ணீறணிந்த மேனி யானை
 வெண்பளிங்கி னுட்பதித்த சோதி யானை
ஒப்பானை யொப்பிலா வொருவன் தன்னை
 உத்தமனை நித்திலத்தை யுலக மெல்லாம்
வைப்பானைக் களைவானை வருவிப் பானை
 வல்வினையேன் மனத்தகத்தே மன்னினானை
அப்பாலைக் கப்பாலைக் கப்பா லானை
 ஆரூரிற் கண்டடியேன் அயர்த்த வாறே.

பொய்ம்மாயப் பெருங்கடலிற் புலம்பா நின்ற
 புண்ணியங்காள் தீவினைகாள் திருவே நீங்கள்
இம்மாயப் பெருங்கடலை யரித்துத் தின்பீர்க்
 கில்லையே கிடந்ததுதான் யானேல் வானோர்
தம்மானைத் தலைமகனைத் தண்ண லாரூர்த்
 தடங்கடலைத் தொடர்ந்தோரை யடங்கச் செய்யும்
எம்மான்ற னடித்தொடர்வா னுழிதர் கின்றேன்
 இடையிலேன் கெடுவீர்காள் இடறேன் மின்னே.

நீற்றினையும் நெற்றிமே லிட்டார் போலும்
 நீங்காமே வெள்ளெலும்பு பூண்டார் போலும்
காற்றினையுங் கடிதாக நடந்தார் போலுங்
 கண்ணின்மேற் கண்ணொன்று உடையார் போலுங்
கூற்றினையுங் குரைகழலா லுதைத்தார் போலுங்
 கொல்புலித்தோ லாடைக் குழகர் போலும்
ஆற்றினையுஞ் செஞ்சடைமேல் வைத்தார் போலும்
 அணியாரூர்த் திருமூலட் டான னாரே.

திருமணியைத் தித்திக்குந் தேனைப் பாலைத்
 தீங்கரும்பின் இன்சுவையைத் தெளிந்த தேறல்
குருமணியைக் குழல்மொந்தை தாளம் வீணை
 கொக்கரையின் சச்சரியின் பாணி யானைப்

பருமணியைப் பவளத்தைப் பசும்பொன் முத்தைப்
பருப்பதத்தி லருங்கலத்தைப் பாவந் தீர்க்கும்
அருமணியை ஆரூரி லம்மான் றன்னை
யறியா தடிநாயே னயர்த்த வாறே.

பிறப்போ டிறப்பென்று மில்லா தான்காண்
பெண்ணுருவோ டாணுருவ மாயி னான்காண்
மறப்படுமென் சிந்தைமருள் நீக்கி னான்காண்
வானவரு மறியாத நெறிதந் தான்காண்
நறப்படுபூ மலர்தூபந் தீப நல்ல
நறுஞ்சாந்தங் கொண்டேத்தி நாளும் வானோர்
சிறப்போடு பூசிக்குந் திருவா ரூரில்
திருமூலட் டானத்தெஞ் செல்வன் றானே.

நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலுமெம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கு மிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்
சங்கரா சயபோற்றி போற்றி யென்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதீயென்றும்
ஆரூரா என்றென்றே அலறா நில்லே.

கற்றவர்க ளுண்ணுங் கனியே போற்றி
கழலடைந்தார் செல்லுங் கதியே போற்றி
அற்றவர்கட் காரமுத மானாய் போற்றி
அல்லலறுத் தடியேனை ஆண்டாய் போற்றி
மற்றொருவ ரொப்பில்லா மைந்தா போற்றி
வானவர்கள் போற்றும் மருந்தே போற்றி
செற்றவர்தம் புரமெரித்த சிவனே போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி.

ஒருவனாய் உலகேத்த நின்ற நாளோ
ஓருருவே மூவுருவ மான நாளோ
கருவனாய்க் காலனைமுன் காய்ந்த நாளோ
காமனையுங் கண்ணழலால் விழித்த நாளோ
மருவனாய் மண்ணும் விண்ணுந் தெரித்தநாளோ
மான்மறிக்கை யேந்தியோர் மாதோர் பாகந்
திருவினள் சேர்வதற்கு முன்னோ பின்னோ
திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே.

திரு ஆரூர் அரநெறி.

பொருங்கைமத கரியுரிவைப் போர்வை யானைப்
பூவணமும் வலஞ்சுழியும் பொருந்தி னானைக்
கருப்புதரு கட்டியையின் னமிர்தைத் தேனைக்
காண்பரிய செழுஞ்சுடரைக் கனகக் குன்றை
இருங்கனக மதிலாரூர் மூலட் டானத்
தெழுந்தருளி யிருந்தானை யிமையோ ரேத்தும்
அருந்தவனை அரநெறியி லப்பன் தன்னை
அடைந்தடியேன் அருவினைநோய் அறுத்த வாறே.

திருச்சிற்றம்பலம்.



# சுந்தரமூர்த்தி சுவாமிகள்

7-வது திருமுறை.

பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

இறைகளோ டிசைந்த இன்பம் இன்பத்தோ டிசைந்த வாழ்வு
பறைகிழித் தனைய போர்வை பற்றியா னோக்கி னேற்குத்
திறைகொணர் தீண்டித் தேவர் செம்பொனு மணியுந் தூவி
அறைகழ லிறைஞ்சு மாரு ரப்பனே யஞ்சி னேனே.

பண் - கொல்லி.

குருகுபா யக்கொழுங் கரும்புகள் நெரிந்தசா
றருகுபா யும்வய லந்தணா ரூரரைப்
பருகுமா றும்பணிந் தேத்துமா றுங்நினைந்
துருகுமா றும்மிவை யுணர்த்தவல் லீர்களே.

நித்தமா கநினைந் துள்ளமேத் தித்தொழும்
அத்தனம் பொற்கழ லடிகளா ரூரனைச்
சித்தம்வைத் தபுகழ்ச் சிங்கடி யப்பன்மெய்ப்
பத்தனூ ரன்சொன்ன பாடுமின் பத்தரே.

பண் - பழம்பஞ்சுரம்.

ஏழிசையா யிசைப்பயனா யின்னமுதா யென்னுடைய
தோழனுமாய் யான்செய்யுந் துரிசுகளுக் குடனாகி
மாழையொண்கண் பரவையைத்தந் தாண்டானை மதியில்லா
ஏழையேன் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே.

## திருத்தொண்டத்தொகை.

பண்-கொல்லிக்கௌவாணம்.

திருச்சிற்றம்பலம்.

தில்லைவா ழந்தணர்தம் மடியார்க்கு மடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்
இல்லையே யென்னாத இயற்பகைக்கு மடியேன்
இளையான்றன் குடிமாற னடியார்க்கு மடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டர்க் கடியேன்
அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக் கடியேன்
ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே.

பத்தராய்ப் பணிவார்க ளெல்லார்க்கு மடியேன்
பரமனையே பாடுவா ரடியார்க்கு மடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கு மடியேன்
திருவாரூர்ப் பிறந்தார்க ளெல்லார்க்கு மடியேன்
முப்போதுந் திருமேனி தீண்டுவார்க் கடியேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கு மடியேன்
அப்பாலு மடிச்சார்ந்த வடியார்க்கு மடியேன்
ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே.

மன்னியசீர் மறைநாவ னின்றவூர்ப் பூசல்
வரிவளையாள் மானிக்கும் நேசனுக்கு மடியேன்
தென்னவனா யுலகாண்ட செங்கணார்க் கடியேன்
திருநீல கண்டத்துப் பாணனார்க் கடியேன்
என்னவனா மரனடியே யடைந்திட்ட சடையன்
இசைஞானி காதலன் திருநாவ லூர்க்கோன்
அன்னவனா மாரூர னடிமைகேட் டுவப்பார்
ஆரூரி லம்மானுக் கன்பரா வாரே.

பண் - தக்கேசி.

பொன்னு மெய்ப்பொரு ளுந்தரு வானைப்
போக முந்திரு வும்புணர்ப் பானைப்
பின்னை யென்பிழை யைப்பொறுப் பானைப்
பிழையெ லாந்தவி ரப்பணிப் பானை
இன்ன தன்மைய னென்றறி யொண்ணா
எம்மா னையெளி வந்த பிரானை
அன்னம் வைகும் வயற்பழ னத்தணி
யாரு ரானை மறக்கலு மாமே.

பண் - காந்தாரம்.

கரையுங் கடலு மலையுங் காலையு மாலையு மெல்லாம்
உரையில் விரவி வருவா னொருவ னுருத்திர லோகன்
வரையின் மடமகள் கேள்வன் வானவர் தானவர்க் கெல்லாம்
அரைய னிருப்பது மாரூ ரவ ரெம்மையு மாள்வரோ கேளீர்.

எந்தை யிருப்பது மாரூ ரவ ரெம்மையு மாள்வரோ வென்று
சிந்தை செயுந்திறம் வல்லான் திருமரு வுந்திரள் தோளன்
மந்த முழவம் மியம்பும் வளவய லாவலா ரூரன்
சந்த மிசையொடும் வல்லார் தாம்புக ழெய்துவர் தாமே.

பண் - புறநீர்மை.

அந்தியு நண்பகலும் அஞ்சுப தஞ்சொல்லி
முந்தியெ ழும்பழைய வல்வினை மூடாமுன்
சிந்தை பராமரியாத் தென்றிரு வாரூர்புக்
கெந்தை பிரானாரை யென்றுகொ லெய்துவதே.

பண் - செந்துருத்தி.

மீளா வடிமை யுமக்கே யாளாய்ப் பிறரை வேண்டாதே
மூளாத் தீப்போ லுள்ளே கனன்று முகத்தான் மிகவாடி
ஆளா யிருக்கு மடியார் தங்க ளல்லல் சொன்னக்கால்
வாளாங் கிருப்பீர் திருவா ரூரீர் வாழ்ந்து போதீரே.

காரூர் கண்டத் தெண்டோண் முக்கண் கலைகள் பலவாகி
ஆரூர்த் திருமூ லட்டா னத்தே யடிப்பே ராரூரன்
பாரூ ரறிய என்கண் கொண்டீர் நீரே பழிப்பட்டீர்
வாரூர் முலையாள் பாகங் கொண்டீர் வாழ்ந்து போதீரே.

## பரவையுண்மண்டளி.-

பண் - பஞ்சமம்.

தூவாயா தொண்டுசெய் வார்படு துக்கங்கள்
காவாயே கண்டுகொண் டாரைவர் காக்கிலும்
நாவாயா லுன்னையே நல்லன சொல்லுவேற்
காவாவென் பரவையுண் மண்டளி யம்மானே.

அம்மானே யாகம சீலர்க் கருணல்கும்
பெம்மானே பேரரு ளாளன் பிடவூரன்
தம்மானே தண்டமிழ் நூற்புல வாணர்க்கோர்
அம்மானே பரவையுண் மண்டளி யம்மானே.

திருச்சிற்றம்பலம்.



# மாணிக்கவாசக சுவாமிகள்

திருவாசகம். 8-வது திருமுறை.

திருச்சிற்றம்பலம்.

பூங்கமலத் தயனொடு மாலறியாத நெறியானே
கோங்கலர்சேர் குவிமுலையாள் கூறுவெண் ணீறுடீ
ஓங்கெயில்சூழ் திருவாரூ ருடையானே யடியேனின்
பூங்கழல்க ளவையல்லா தெவையாதும் புகழேனே.

சடையானே தழலாடீ தயங்குமூ விலைச்சூலப்
படையானே பரஞ்சோதீ பசுபதீ மழவெள்ளை
விடையானே விரிபொழில்சூழ் பெருந்துறையா யடியேனு
முடையானே யுனையல்லா துறுதுணைமற் றறியேனே.

உற்றாரை யான்வேண்டே னூர்வேண்டேன் பேர்வேண்டேன்
கற்றாரை யான்வேண்டேன் கற்பனவு மினியமையுங்
குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தாவுன் குரைகழற்கே
கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே.

## திருக்கோவையார்.

சிலம்பணி கொண்டசெஞ் சீறடிபங்கன் றன்சீரடியார்
குலம்பணி கொள்ளவெனைக் கொடுத்தோன் கொண்டு தானணியுங்
கலம்பணி கொண்டிடமம்பலங் கொண்டவன் கார்க்கயிலைச்
சிலம்பணி கொண்டநுஞ் சீறார்க்குரைமின்கள் சென்னெறியே.

## பூந்துருத்திநம்பிகாடநம்பி

திருவிசைப்பா. 9-வது திருமுறை.

கைக்குவான்முத்தின் சரிவளைபெய்து கழுத்திலோர் தனிவடங்கட்டி
முக்கணுயகராய்ப் பவனிபோந்திங்ஙன் முரிவதோர் முரிவுமைபளவுந்
தக்கசீர்க்கங்கை யளவுமன்றென்னே தம்மொருப்பா டுலகதன்மேன்
மிக்கசீராரூராதியாய் வீதிவிடங்காய் நடங்குலாவினரே.

பத்தியாயுணர்வோ ரருளைவாய்மடுத்துப் பருகுதோறமுத மொத்தவர்
தித்தியாவிருக்குந் தேவர்காளிவர்தந் திருவுரு விருந்தவாபாரீர் [க்கே
சத்தியாய்ச்சிவமா யுலகெலாம்படைத்த தனிமுழுமுதலுமா யதற்கோர்
வித்துமா யாரூராதியாய் வீதிவிடங்காய் நடங்குலாவினரே.

திருச்சிற்றம்பலம்.

## சேந்தனாரருளிச் செய்த திருப்பல்லாண்டு.

குழலொலி யாழொலி கூத்தொலி யேத்தொலி யெங்குங் குழாம்பெருகி
விழவொலி விண்ணளவுஞ் சென்றவிம்மிமிகு திருவாரூரின்
மழவிடையாற்கு வழிவழியாளாய் மணஞ்செய் குடிப்பிறந்த
பழவடியாரொடுங்கூடி யெம்மானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

## திருமூலர்—திருமந்திரம். 10-வது திருமுறை.

சிவமொடுசத்தி திகழ்நாதம்விந்து
தவமானவைம் முகனீசனானும்
பவமுறுமாலும் பதுமத்தோனீரு
நவமவையாகி நடிப்பவன்றானே.

தானேபடைத்திடுந் தானேயளித்திடுந்
தானே துடைத்திடுந் தானேமறைத்திடுந்
தானேயிவைசெய்து தான்முத்திதந்திடுந்
தானேவியாபித் தலைவனுமாமே.

## சேரமான்பெருமாள் நாயனார் மும்மணிக்கோவை. 11-ம் திருமுறை.

கட்டளைக்கலித்துறை,

காருமுழக்கொடு மின்னொடுவந்தது காதலர்தந்
தேருந்தெருவுஞ் சிலம்பப்புகுந்தது சில்வளைகள்
சோருஞ்சிலபல வங்கமெரிந்தன துன்னருநஞ்
சாருமிடற்றண்ண லாரூரனைய வணங்கினுக்கே.

புள்ளுந்துயின்று பொழுதிறுமாந்து கழுதுறங்கி
நள்ளென்றகங்கு லிருள்வாய்ப்பெருகிய வார்பனிநாட்
டுள்ளுங்கலைக்கைச் சுடர்வண்ணனைத்தொழு வார்மனம்போன்
றுள்ளுமுருக வொருவர்திண்டேர்வந் துலாத்தருமே.

---

## திருத்தொண்டர் புராணம். 12-ம் திருமுறை.

தண்ணளிவெண் குடைவேந்தன் செயல்கண்டு தரியாது
மண்ணவர்கண் மழைபொழிந்தார் வானவர் பூமழைசொரிந்தார்
அண்ணலவன் கண்ணெதிரே யணிவீதி மழவிடைமேல்
விண்ணவர்கள் தொழநின்றான் வீதிவிடங்கப் பெருமான்

தேராரு நெடுவீதித் திருவாரூர் வாழ்வாருக்
காராத காதலினம் மாரூரனமழைக்க
வாராகின் றானவனை மகிழ்ந்தெதிர்கொள் வீரென்று
நீராருஞ் சடைமுடிமேல் நிலவணிந்தாரருள்செய்தார்.

திருச்சிற்றம்பலம்.

# தலபுராணத் தோத்திரங்கள்.

### வாதாவிவிநாயகர்.

உலகமுழுதீன்றபசுங்கன்னியிளம்பிடியினிடத்துதித்துவேதக்
குலவுமொளிமணிக்கூடத்துபநிடதத்தளைமருவிக்குடிலையென்னும்
இலகுதனிக்கம்பத்தினின்றன்பர்மனத்தண்டத்தினிதுலாவும்
மலர்மகளின்புறமாரூர்வாதாவிவாரணத்தைவணங்கிவாழ்வாம்

### வன்மீகநாதர்.

பூமேவுதிருமடந்தைபொன்முகத்தாமரைமலரப்புவிவிளங்க
நாமேவுசுருதியிசைமுனிஞிமிறுஞானமணநனியுண்டார்ப்பக்
காமேவுகமனியநாட்டமரர்மனக்கவலையிருட்கங்குனீங்கத்
தேமேவுபொழிலாரூர்புற்றிடங்கொண்டெழுசுடரைச்சிந்தைசெய்வாம்

### அல்லியங்கோதையம்மை.

தொல்லைமாஞாலமாதித்தொகையிலாவண்டநல்கிச்
செல்வமாண்கருணையாகுஞ்சிறகாலணைத்துப்போற்று
மல்லலஞ்செழுநீர்வாவிவண்கமலாலயத்து
ளல்லியங்கோதையென்னுமன்னத்தையகத்துள்வைப்பாம்

### தியாகராஜர்.

கார்பொருவுங்கருங்கூந்தற்செவ்வாய்வெண்ணகைப்பச்சைக்கன்னியோடுந்,
தார்கமழ்பூங்காந்தளந்தோட்குமரனொடுமணிச்சிங்காதனத்துமேவிச்,
சீர்பரவுவான்புலவர்நினைந்தனயாவையுநல்கிச்சிறப்பின்வைகும்,
வார்புனல்சூழ்வயற்கமலைத்தேவர்கள்சிந்தாமணியைமனத்துள்வைப்
[பாம்.

### கமலாம்பிகை.

அறங்கழையபக்கலைத்தெரிவைவனப்பெய்தச்சசியெனும்பேரரிவைவாழ,
நிறங்கெழுபூமடந்தையொடுநிலமங்கைமங்கலத்தினிறைந்துமல்கப்,
பிறங்குமுயிர்த்தொகையனைத்துங்களிகூரத்தவம்புரியும்பீடுசான்ற,
சிறந்தகமலாலயநாயகிசெம்பொற்சேவடிகள்சென்னிசேர்ப்பாம்.

### இலக்குமி.

தண்கமலத்திருந்தீசனடிக்கமலமனக்கமலந்தன்னில்வைத்து
வண்கமலக்கண்ணனைமணவாளனெனப்பெறுவான்மாதவஞ்செய்
தொண்கமலாலயமெனும்பேரொளியார்ந்ததிருவாரூர்க்குகந்தணிந்த
பெண்கமலங்கைக்கமலம்பிடித்தகொடிதனைத்தொழுதுபெரிதுவாழ்வாம்

### மாற்றுரைத்த விநாயகர்.

திருமன்னுவேள்விமறைமுனிவர்மனப்புலத்தெழுந்துசிறப்பினோங்கிக்
கருணைதழைத்தறமரும்பிஞானம்பூத்தகலவினைகாய்ந்துத்தொல்லை
யிருளகன்றமுத்திபழுத்தின்பநறுஞ்சுவையென்றமினிதுநல்கும்
மருமலிபூம்பொழிலாரூர்மாற்றுரைத்தகற்பகத்தைவணங்கிவாழ்வாம்.

## அருணகிரிநாதர் திருப்புகழ்.

பாலோ தேனோ பாகோ வானோர் பாரா வாரத் — தமுதேயோ-
பாரோர் சீரோ வேளேர் வாழ்வோ பானோ வான்முத் — தெனநீளத்;
தாலோ தாலே லோபா டாதே தாய்மார் நேசத் — துனுசாரந்-
தாரா தேபே ரீயா தேபே சாதே யேசத் — தகுமோதான்;
ஆலோல் கேளா மேலோர் நாண்மா லானா தேனற் — புனமேபோய்-
ஆயாள் தாள்மேல் வீழா வாழா ஆளா வேளைப் — புகுவோனே;
சேலோ டேசே ராரால் சாலார் சீரா ரூரிற் — பெருவாழ்வே-
சேயே வேளே பூவே கோவே தேவே தேவப் — பெருமாளே.

நீதானெத் தனையாலும் - நீடேழிக் க்ருபையாகி;
மாதானத் தனபாக - மாஞானக் கழல்தாராய்;
வேதாமைத் துனவேளே - வீராசற் குணசீலா;
ஆதாரத் தொளியானே - ஆரூரிற் பெருமாளே.

காமு முளரியின் மலர்முக மதிகுழல்
கனம தெனுமொழி கனிகதிர் முலைநகை
கலக மிடுவிழி கடலென விடமென — மனதூடே-
கருதி யனநடை கொடியிடை யியல்மயில்
கமழு முகிலுட னிளகிய ம்ருகமத
களப புளகித கிரியினு மயல்கொடு — திரிவேனும்;
இரவு பகலற இகலற மலமற
இயலு மயலற விழியினி ரிழிவர
இதய முருகியெ யொருகுள பதமுற — மடலூடே-
யெழுத அரியவள் குறமக ளிருதன
கிரியில் முழுகின இளையவ னெனுமுறை
யினிமை பெறுவது மிருபத மடைவது — மொருநாளே;
சுரபி மகவினை யெழுபொருள் வினவிட
மனுவி னெறிமணி யசைவுற விசைமிகு
துயரில் செவியினி லடிபட வினவும் — னதிதீது-
துணிவி லிதுபிழை பெரிதென வருமநு
உருகி யாகர சிவசிவ பெறமதொர்
சுரபி யலமர விழிபுனல் பெருகிட — நடுவாகப்;
பரவி யதனது துயர்கொடு நடவிய
பழுதின் மதலையை யுடலிரு பிளவொடு
படிய ரதமதை நடவிட மொழிபவ — னருளாரூர்ப்-
படியி லறுமுக சிவசுத கணபதி
யிளைய குமரநி ருபபதி சரவண
பரவை முறையிட அயில்கொடு நடவிய — பெருமாளே

முற்றிற்று.

